[20th January 1964

SRI L. S. KARAYALAR : Are these stray cattle milch cattle?

THE HON. SRI R. VENKATARAMAN : I am not sure if the stray cattle give milk. The milch cattle are properly tended and cared for. It is only others that stray about.

*Sales tax*

* 10 *Q.*—SRI A. K. THANGAVEL MUDALIAR : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the reduction in the sales tax revenue from the bullion merchants consequent on the introduction of Gold Control Rules;

(*b*) whether the Government of India will compensate this loss by way of grants; and

(*c*) the amount of sales tax collected from the bullion ants during February 1962 and from February 1963 to April 1963?

கனம் திரு. ஆர். வெங்கட்டராமன் : (அ) ரூ. 14,68,935 (1—4—1963 லிருந்து 31—3—1964 வரையுள்ள கால அளவில் உத்தேச வருமானக் குறைவு).

(இ) இல்லை.

(உ) 1962 பெப்ரவரியில் ரூ. 1,93,987.

1963 பெப்ரவரி முதல் ஏப்ரல் வரை ரூ. 5,73,015.

*Corporation of Madras*

* 11 *Q.*—SRI L. S. KARAYALAR : Will the Hon. the Minister for Local Administration be pleased to state the procedure adopted for recruitment of candidates for (i) temporary; and (ii) permanent vacancies in the Corporation of Madras?

கனம் திரு. சே. ம. அ. மஜீத் : சென்னை மாநகராட்சியின் கீழ் முக்கியத்துறைத் தலைவர்கள் பதவிகளுக்கு அதாவது சுகாதார அதிகாரி, என்ஜினியர், மின்சார என்ஜினியர், ரெவின்யூ அதிகாரி, தலைமைக் கணக்கு அதிகாரி, கல்வி அதிகாரி, ஆகியப் பதவிகளுக்கு மாநில அரசினர் தயாரிக்கும் பெயர்ப் பட்டியலிலிருந்து ஆளைத் தேர்ந்தெடுத்து மாநகராட்சிக் கவுன்சில் நியமனங்களைச் செய்கிறது. மற்ற துறைத் தலைவர்கள் பதவிகளான, தண்ணீர்கட்டு வேலைகள் என்ஜினியர், கழிவு நீர் என்ஜினியர், மெக்கானிக்கல் என்ஜினியர், துதிப்புறவு அதிகாரி, கவுன்சில் செயலாளர், துறைத் தலைவர்களுக்கு உதவி அதிகாரிகள் ஆகியோர்களைக் கவுன்சில் நியமனம் செய்கிறது. ஆனால் அந்த நியமனங்களை மாநில அரசினர் உறுதிப் படுத்தவேண்டும். மாதம் ஒன்றுக்கு நூறு ரூபாய்க்கு மேல் சம்பளம் அல்லது அதிகபட்ச சம்பளம் பெறுகிற கீழ்ப் பணியாளர் பதவிகளுக்கு கமிஷனர் நியமனங்களைச் செய்கிறார். நியமனக்குழு அங்கீகரிக்கும் பெயர் பட்டியலிலிருந்து